Jesus is the
answer
Jesu
the world
for today.

# கறுப்பு மலர்கள்

(கவிதைகளும் சில வசன கவிதைகளும்)

கவியரசு

நா. காமராசன், எம்.ஏ.

பாரதி பதிப்பகம்

108, உஸ்மான் சாலை,

தியாகராயநகர் :: சென்னை-17

கறுப்பு மலர்கள்

முதற் பதிப்பு : ஏப்ரல், 1971
இரண்டாம் பதிப்பு ; ஜூலை, 1976
மூன்றும் பதிப்பு : ஜூலை, 1977
நான்காம் பதிப்பு : மே 1980
ஐந்தாம் பதிப்பு : மார்ச், 1983
ஆறும் பதிப்பு : செப்டம்பர் 1986



விலை ரூபாய் 6-50

அச்சிட்டோர் :
மீரா பிரஸ், AE 103, அண்ணாநகர், சென்னை-40

# கறுப்பு மலர்கள் -

### ஒரு விமர்சனம்

### கவியரசர் கண்ணதாசன்

கற்பனைகள் ஆசையோடு குதித்தெழும்போது சுவையான கவிதை பிரசவமாகிறது.

எண்ணங்கள் தடையின்றி இதிலிருந்து இதுவரை என்ற வரம்பின்றி, பிரவாகம்போல் ஓடும்போது அபூர்வமான முத்துக்கள் சிதறுகின்றன.

மனேதர்மத்தின் ஓட்டமே மயக்கம் மிகுந்த கவிதைக்கு நியாயமாகும்.

நல்ல ஓவியனின் தூரிகை துணியிலே நர்த்தனமாடும் போது அவன் எதிர்பார்ப்பதைவிட நல்ல ஓவியம் பிறக்கிறது.

சொல்லும் பொருளும் கைவந்ததாகி விட்டால் சொல்லு கின்ற எந்தப் பொருளும் சுவையாகிறது.

ஒரு நிலேக்குத் தன்னே ஒப்புக் கொடுத்துக் கொண்டு மறு நிலேயை உதாசீனப்படுத்துவது உணர்ச்சியின் விளேவே.

அதே மறுநிலேக்குத் தன்னே ஒப்புக் கொடுக்க வரும் போது முதல் நிலேயிலிருந்து முரண்படுவதற்கும் காரணம் அதுவே.

எந்த இடத்திலும் பாய்ந்து செல்லும் வெள்ளம் கவிஞனின் உள்ளம்.

அவனது கவிதைகளில் ''ஏன்? எப்படி?'' என்ற கேள்வி கள் எழுமானுல் கேள்வியை எழுப்பியவர்கள்தான் பதில் சொல்ல வேண்டுமே தவிர அது கவிஞனின் வேலேயல்ல.

அவன் சொல்வதெல்லாம் அவனுக்கு நியாயமே.

யாருக்கு எது பிடிக்கும் என்று தேடிப் பார்த்து அவன் பரிமாற முடியாது.

அவன் விரித்த பந்தி...!

அவன் போட்ட இலை...!

அவன் வைக்கின்ற உணவு.

பசிக்கின்ற நல்ல வயிறு உள்ளவர்கள் அங்கே அமரலாம்.

யார் யாருக்குப் பசிக்குமென்று அவன் கண்டுபிடிக்க முடியாது.

ஆகவே, தான் என்ற நிலையிலிருந்து தனக்காக என்ற ஆசையோடு அவன் படைக்கின்ற விருந்துதான் சமூகத்தின் முன்னால் வைக்கப்படுகிறது.

அப்படி வைக்கப்படும் ஒரு விருந்து நண்பர் **காமராசனின்** இந்தக் கறுப்பு மலர்களாகும்.

உலகின் பிற பாகங்களிலிருந்து கலந்துவிட்ட கவிதை நாகரிகத்தின் எதிரொலிகள் இந்த நூலெங்கும் விரவிக் கிடக்கின்றன.

வெறும் இலக்கண எருவுக்குள் புழுத்த புழுக்களாய் ஆக்கியோனுக்கும் படிப்போனுக்கும் பயனின்றி வெறும் எழுத்துக் கோர்வையாய் வெளிவந்த நூல்கள் சில தமிழில் உண்டு.

அந்நிலையிலன்றி **இலட்சிய வேலியையே இலக்கண வேலியாகக் கொண்டு புள்ளிமான்கள் போல் துள்ளி ஓடும் கவிதைகளை இதில் நாம் காண்கிறோம்.**

தலைப்புகள் தமிழ் மரபுக்குப் புதியவை.

கவிதைக்கான கருவும் புதுமையானதே.

புதுமையின் தோற்றம் முதலில் குழப்பத்தைத் தரும்.

படிக்கப் படிக்க மயக்கத்தைத் தரும்.

மயக்க வைக்கும் சொற்சித்திரங்கள் இவை.

வடக்கத்தி மங்கையர்போல் முழுக்கவும் மூடாமல், கேரளமாதர்போல் முழுக்கவும் திறந்துவிடாமல், தமிழகப் பெண்கள்போல் ஒதுங்கியும் ஒதுங்காமல் அழகு காட்டும் கவிதைகளை இதில் நாம் காண்கிறோம்.

நவீன உலகத்தின் ஜாடைகள், ஆங்காங்கு மின்னுகின்றன.

இதனை வசன கவிதை என்பதைவிட வெள்ளைக் கவிதை என்பது பொருந்தும்.

வெள்ளைக் கவிதையில் கறுப்பு மலர்கள் காட்டப்படுகின்றன.

இந்தத் தொகுப்பு தமிழுக்குப் புதியதல்ல.

ஆனால் பலர் முயன்று தோற்றது.

காரணம், கருத்துக்கள் கர்ப்பமாகாமலேயே சொற்கள் அடைந்து விழுந்ததுதான்.

அந்த வகையில் இது, முதல் வெற்றி நூலாக அமையக் கூடும்.

நண்பர் காமராசனின் பிரகாசமான எதிர் காலத்திற்கு இது முதல் ஜனனம்.

ஆங்கிலக் கவிதை மலர்களை தமிழில் மொழி பெயர்ப்பது போல் தோன்றும். இதனை ஆங்கிலத்திலும் பிற மொழிகளிலும் மொழி பெயர்க்க முடியும்.

மொழி பெயர்த்தால் வெற்றியும் பெறும்.

அன்பன்,<br>
**கண்ணதாசன்**

**சென்னை-17**<br>
*27—3—71*

## காணிக்கை

புழுதிக் கட்டில்களாக மாறி எவருடைய
ஏழைத் தோழர்களை உறங்கவைக்கும்
கோடானு கோடி நடைபாதைகளுக்கு...

—நா. காமராசன்

## சுயபுராணம்

இந்த தேவவேளையில்... தமிழையும், உலக இலக்கியங்களையும் எனக்கு அறிமுகப்படுத்திய "அண்ணு"வைப் பற்றிய உருக்கமான நினைவுகள் என்னிலே அலைமோதுகின்றன எவன் எனது கவித்துவத்தின் ஊற்றுக் கண்களைத் திறந்து விட்டவனே... அவன் அந்த அண்ணு... இந்தக் கவிதைகளில் ஒரு வரியைக் கூடப் படிக்காமல் மடிந்து போய் விட்டான் என்கிற உண்மையை என்னலே ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. கவிதையென்பது கண்ணீரையே தாய்ப்பாலாக்கிக் கொள்கிற சின்னக் குழந்தையாக இருக்கும்போது—விரக்தி எனும் தொட்டிலிலே அது அமைதியாகக் கண்ணுறக்கம் கொள்கிறபோது கவிஞர்கள் சோகங்களால் தாக்கப்படுவதில் வியப்பென்ன இருக்கிறது? ஆனல் நான் ஒரு சோசலிசக் கவிஞன். இழப்புகளுக்குப் பிறகும் பயணம் செய்கிறவன். எனது பெயர் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற வேண்டும் என்பதற்காக நான் எழுதுவதில்லை. தமிழின் பெயர் உலக இலக்கியத்தில் இடம் பெற வேண்டும் என்பதற்காகத்தான் எழுதிக் கொண்டிருக்கிறேன். 'சூரிய காந்தியும், கறுப்பு மலர்களு'ம் அந்த வகையில் எனது முதல் முயற்சிகளாகும்.

எனது இலக்கியத் தாயாகிய 'தாமரை' இதழுக்கும், தமிழகத்திற்கு எனது கவிதைகளை மிகத் தெளிவாக அறிமுகப் படுத்திய 'கண்ணதாசன்', 'கடிதம்' (இலக்கிய ஏடு) ஆகிய இதழ்களுக்கும் நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவன்.

என்னுடைய கவிவெறியை அறுவடைக் காலத்துத் தானியமணியைப் போல் பயனுடையதாக்கிய நண்பர்

தி.க. சிவசங்கரன் அவர்களையும், வசந்தமலரைப்போல் அழகுறையதாக்கிய சகோதரர் இராம கண்ணப்பன் அவர்களையும் நான் என்றும் மறவேன். [வாழ்த்துப்பா வழங்கியுள்ள கண்ணியம் நிறைந்த எங்கள் அண்ணன் கவிஞர் கருணானந்தம் அவர்களுக்கு என் இதய வணக்கம்.]

நான் இலக்கியத்துறையில் வளர ஆரம்பித்த உடனேயே என்னை முழுமையாக ஏற்றுக்கொண்டு என்னிடம் தாயன்பு காட்டி வருகிறவர் கவியரசு கண்ணதாசன். அவருடைய 'விமர்சனம்' இந்த நூலை அழகுபடுத்துகிறது:

புத்தக வெளியீட்டு முயற்சியில் என்னை உற்சாகப் படுத்திய அண்ணன் கோவிந்தசாமி அவர்களுக்கும், அற்புதமாக நூலை அச்சிட்ட அச்சகத்தார்க்கும் எனது நன்றி.

1968 முதல் போன மாதம் வரை எனது பெயரிலும் புனைப்பெயர்களிலும் நான் எழுதிய கவிதைகளும், சில வசன கவிதைகளும் இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. இந்தக் கவிதைகளை அனுப்பியவுடன் வெளியிட்டு என்னை உற்சாகப்படுத்திய தாமரை, கண்ணதாசன், கடிதம், முரசொலி, குறள்நெறி, எழுத்து, நான்கு பக்கம் ஆகிய இதழ்களுக்கு எனது நன்றி.

பகுத்தறிவு, சோசலிசம் என்கிற அடிப்படை இலட்சியங்கள் எனக்குண்டு. அவற்றைக் கலாபோதையோடு நான் பாடுவேன். ஆனால் அவற்றைப் பாடுகிறவன் மட்டும் தான் இலக்கியவாதி என்று நான் வரட்டுக் கூச்சல் போட மாட்டேன். கவிதை என்பது—நாடு, மொழி, இனம் முதலிய எல்லைகளுக்கும் அப்பால், சிறகு விரிக்கிற உலகப் பறவை. இனிநீங்கள்...இந்தக் கவிதைகளைத் துலாபாரம் செய்வது பற்றி எனக்கு ஆட்சேபனை இல்லை.

அன்புள்ள,
**நா. காமராசன்**

சென்னை-24
26—4—71

## சுவடுகள்

வானவில் நாகள்ளிலே—உன்
    மோனக் கனவுகளும்
கூனல் பிறையோரம்—உன்
    கொள்கைக் கவிவெறியும்
காணக் கிடக்கிறது—என்
    கண்ணீர் நடக்கிறது!

மாலைத் திசைகளிலும்—மோக
    வசந்த நிழல்களிலும்
காலை வெளுப்பினிலும்—உன்
    கற்பனை தெரிகிறது.
சோலை மலர்தோறும்—உன்
    தூது வருகிறது.

பாழின் இரவுகளில்—குயில்
    பாடும் பொழுதுகளில்
யாழின் புலம்பல்களில்—நாக்கு
    யாகம் நடத்துகிறாய்
நாளின் வருகையிலே—உன்
    ஞானத் தடம்பதித்தாய்.

காலப் பறவையதன்—மரண
    கானச் சிறகொலியில்
நீலக் கடல் அலேயில்—மழை
    நீரின் தாய்மொழியில்
ஆழக் கவிக்குரல்கள்—வந்தே
    அரியணை ஏறவைத்தாய்.

பூவின் சருகுகளில்—வானில்
    புதையும் பகல் ஒளியில்
தாவும் பருவங்களில்—உன்
    சாவின் நிழல்கண்டேன்;
காவிரிக் கரை நுரையில்—உன்
    கண்ணீர்த்துளி கண்டேன்.

## ஞானக்குளியல்

சித்திரக் கனவுகள் வித்திய பூமியில்
சிந்திய தேன் துளிநான்—மனப்
புத்தகப் பாடலைத் தத்துவ மேடையில்
புலம்பிடும் பாடகன் நான்.

பிறவிச் சமுத்திர அலையில் நடமிடும்
பிள்ளைச் சிறுநுரைநான்—கலைத்
துறவி படைத்திடும் ஓவிய உலகுக்கோர்
தூரகை மந்திரம் நான்.

கற்பனைப் பாத்தியில் சத்திய வேர்விடும்
காவியப் பூச்செடிநான்—உயிர்ப்
பொற்கொடி மீதொரு பொக்கிச மாகவே
காய்த்துக் கனிந்தவன் நான்.

பொய்மனக் கோட்டை பொடிபட நின்றொரு
போரில் ஜெயித்தவன்நான் – கொடும்
ஐம்புலக் காட்டை அழித்தொரு ஞான
ஆற்றில் குளித்தவன் நான்.

## காகிதப் பூக்கள்

(அலிகளைப் பற்றிய கவிதை)

காலமழைத் தூறலிலே
களையாய்ப் பிறப்பெடுத்தோம்
தாய்ப் பாலின் சரித்திரத்தில்
சதுராடும் புதிரானோம்.

விதைவளர்த்த முள்ளானோம்
விளக்கின் இருளானோம்
சதைவளர்க்கும் பிணம்நாங்கள்
சாவின் சிரிப்புகள்.

மூங்கையொரு பாட்டிசைக்க
முடவனதை எழுதிவைக்க
முடவன்கை எழுதியதை
முழுக்குருடர் படித்ததுண்டோ?

மூங்கையனின் பாட்டானோம்
முடவன்கை எழுத்தானோம்.
முழுக்குருடர் படிக்கின்றார்.
சந்திப் பிழை போன்ற

சந்ததிப் பிழை நாங்கள்!
    காலத்தின் பேரேட்டைக்
கடவுள் திருத்தட்டும்!

தலைமீது பூவைப்போம்
    தாரணியோர் கல்லறையில்
பூவைத்தல் முறைதானே?
    பூத்தஉயிர் கல்லறைகள் நாங்கள்!

தாய்ப்பெண்ணே முல்லைப்பூ
    தனி மலடி தாழம் பூ
வாய்ப்பந்தல் போடுகின்ற நாங்கள்
    காகிதப் பூக்கள் !

## நிலாச் சோறு*

பூமியாத்தாள் மடியுண்டு
புழுதிப்பொன் விரிப்புண்டு;

புழுதிப் பொன் விரிப்புக்குப்
புத்திரனாய் வந்தவன் நான்.

பூகம்பம் முத்தமழை
புயல்எனக்குத் தாலாட்டு

தண்ணீரே தாய்ப்பாலாம்
கண்ணீர்என் புன்னகையாம்!

பசி எனக்கு விளையாட்டு
பருவங்கள் மாற்றுடைகள்.

இடுகாடே மண்குடிசை
இறப்பெனது நித்திரையாம்

இறப்பென்ற நித்திரைக்காய்
என்றோநான் விழிதிறந்தேன்!

---

* அமாவாசைக்கு முதல் நாள் இரவில்......ஒரு பிச்சைக்காரனின் கண்ணீர் நினைவுகள்

தும்பைப்பூச் சந்திரனைத்
துண்டாடும் ராத்திரியாம்
துண்டாடும் ராத்திரியில்
தூங்காத விண்மீன்கள்

நாளைக்கோ அமாவாசை
நரைத்தநிலாக் கல்லறைநாள்
நரைத்தநிலாக் கல்லறைக்குள்
நான் தூங்க வருகின்றேன்.

துண்டுநிலா சோறாக...
துளிவிண்மீன் கறியாக...
கண்டுபசிநோய் கொண்டேன்!
காலன்தேர் என்றுவரும்?

# அஞ்சலி

ஓ...என் பிரியமானவளே!
ஓ...என் பிரியமானவளே!
தைமாதத்தின் பின்னிரவில்

கிருஷ்ணபட்சத்து நிலா வெளிச்சத்தில்
அடிமனத்தின் விழிப்பில்
கனவுகளின் கீதத்தில்
உன்னைத் தேடுகிறேன்!
இந்தத் தேடுதலே எனது சோக தூது
இந்தத் தேடுதலே எனது அஞ்சலி
(ஓ...என் )

கவிதைத் தீவின் புலம்புதலில்
காட்டுப் பூக்களின் சுவாசத்தில்
நட்சத்திரப் புள்ளிகளின் சோகத்தில்
இரவின் நெடிய நிழல்களில்
உன்னைத் தேடுகிறேன்!
இந்தத் தேடுதலே எனது சோக தூது
இந்தத் தேடுதலே எனது அஞ்சலி
(ஓ...என்)

மானுடத்தின் திரைகளில்
மனக்குரல்களின் உறக்கத்தில்
யுகசந்தியின் பாடலில்
உன்னைத் தேடுகிறேன்!
இந்தத் தேடுதலே எனது சோக தூது
இந்தத் தேடுதலே எனது அஞ்சலி
(ஓ...என்)

# கறுத்தம்மா

முன்னொருநாள்...முன்னொருநாள்
மூண்டெழுந்த கவிக்கனலின் ஜுவாலைகளில்
என் விழிகள் சுவைத்திருந்த
எழுத்துலகக் கோப்பைகளின் மதுவானய்!

மனப்பாழின் திரையாகி
மாயைகளின் உடையாகி மண்ணுலகில்
கணப்பொழுதே நடமாடும்
காதலுடன் உறவாடிக் கனவானய்!

கறுத்தம்மே! கறுத்தம்மே!
கடல்நீரில் மூழ்கிவிட்ட "செம்மீனே"
உறுப்பெல்லாம் கவி சுமந்த
ஊர்வலமே! கண்ணீரின் உற்சவமே!

'தகழி' எனும் குயவனை உன்
ஜனனத்தால் பிரும்மாவாய் இனம் காட்டும்
புகழ் மகளே! பொன் பூவே!
பூமிமகள் விழிவாசல் சொப்பனமே!

கனலெங்கும் உன்சிரிப்பு!
காலவெளிச் சாலைகளில் உன்னுடைய
கனவுகளின் புஷ்பரதம்
காற்று நதி அலைகளில் உன் அழுகுரல்கள்!

உலகத்தில் சருகான
உன்னுடைய காதல்மலர் மறுபடியும்
சுவர்க்கத்தில் மலரட்டும்!
சொப்பனத்தில் வசந்தருது வளரட்டும்!

மீன்படகின் பின்புறத்தில்
பூர்ணிமையின் கள்குடித்தல் பூமணலி
ஆன்மாவின் ராகங்கள்
அதோ உனது 'பரீக்குட்டி' பாடுகிறான்!

என்றும் நும் காதல் மலர்
''இடவப்பாதி மழை''த் துளியில் குளித்திடட்டும்
என்றும் நும் ஆத்ம கீதம்
''ஓடக்குழல்'' ;களிலே விழித்தெழட்டும்!

## சபதம்

சபதம் ஏற்றுக் கொள்கிறேன்—நான்
சாவை ஏற்றுக் கொள்கிறேன்
சமஉடமைப் பூக்களின்—மண்
சாரமாகச் செல்கிறேன்.

மின்னல் நரம்பு மேகத்தில்—காற்று
மீட்டும் மழைப் பாடலில்
கண்ணீர் ராகம் பாய்ச்சுவேன்—புரட்சிக்
கனலை மண்ணில் ஊற்றுவேன்.

பூமிச் சருகாம் பாலையை—முத்து
பூத்த கடலகளாக்குவேன்.
புயலைக் கூறு படுத்தியே—கோடிப்
புதிய தென்றலாக்குவேன்.

இரவில் விண்மீன் காசினை—செலுத்தி
இரவலரோடு பேசுவேன்.
இரவெரிக்கும் பரிதியை—ஏழை
விறகெரிக்க வீசுவேன்.

விழிக ளான தீபத்தில்—கனவு
விட்டிலைப் பொசுக்குவேன்.
ஒளிகள் பேசும் மொழியிலே—நான்
இருள்களோடு பேசுவேன்.

உலகத் தோப்பின் மடியிலே—வளர்
மரங்கள் தோறும் பாடுவேன்
கலக நீதி தேடியே—ரத்த
கங்கை யாக ஓடுவேன்!

# அனாதைகள்

அனாதைகளே உங்கள் பாடகன் பாடுகிறான்
அரைவெண்ணிலவின் மீன்களின் ஒளியில்
ஆயிரம் நுரைமலர் ஆற்றங் கரையில்
ஆவியின் நாக்கில் மௌனத்தின் குரலில்
அவன் பாடுகிறான்

அனாதைகளே உங்கள் பாடகன் பாடுகிறான்!
சூனியம் ஏந்திய தீபங்களே!
சூரியன் தூங்கிய துருவங்களே!
ஊமையன் பாடிய பாடல்களே
உயிர்நிழல் இல்லாக் கோடைகளே

உறவெனும் பூமியின் தூசுகளே
ஆவியின் நாக்கில் மௌனத்தின் குரலில்
அவன் பாடுகிறான்!
அனாதைகளே, உங்கள் பாடகன் பாடுகிறான்!

கவிதைக் கரையின் நிழல்களிலே
கனவின் குழந்தை பாடுகிறான்,
கன்னி மரக்குடை மார்புண்டு
காற்றெனும் தாய்ப்பால் அங்குண்டு

பச்சைப் புல்வெளி மடியுண்டு
  பாளைக் கூரையில் நீருண்டு
பாடகன் கண்ணீர் மருந்துண்டு.
  அரைவெண் ணிலவின் மீன்களின் ஒளியில்
ஆயிரம் நுரைமலர் ஆற்றங் கரையில்
  ஆவியின் நாக்கில் மௌனத்தின் குரலில்
அவன் பாடுகிறான்!
  அனாதைகளே, உங்கள் பாடகன் பாடுகிறான்!

## நடைப் பிணங்கள்

(மலைவாழ் பளியர் குலத்தின் சோக வாழ்க்கைப் பாடல்)

கோடைமலைச் சாரல்
குளிர்நதியின் சங்கீதம்
அலஞ்சிப்பூ நந்தவனம்
அந்தவன முற்றுகைக்குள்
ஆசைநிழல் தேக்குமரம்
அங்கேயோர் தேன்கூடு
தேன்கூட்டு மாளிகைக்குத்
திருடர்குலம் நாங்களையா!

பால்சுரத்து மலடாகும்
பச்சைநிறக் கொடிக்கள்ளி
தேன்சுரந்து தாயாகும்
தெக்கணத்துச் சர்க்கரைப்பூ
சர்க்கரைப்பூ இதழ்தொட்டுச்
சத்தமிடும் தேனீக்கள்!

தேனீயோ தேன்சுமக்கும்
தேன்கூட்டைக் கிளைசுமக்கும்
தேன்கூட்டுக் கிளைமரத்தைத்
தென்னர் மலைசுமக்கும்
தென்னர் மலைமுகட்டைத்
தெருவாக்கும் குலம்நாங்கள்!
பாலில் தயிர்பிறக்கும்
பருவமொரு பூப்பிறக்கும்
தேனில் சுவைபிறக்கும்
தேனெடுக்கும் குலம்நாங்கள்!

தொட்டிலிலே கிளிப்பிள்ளை
தோள்மீது மயில்மனைவி
தோளணைந்த மனைவிக்கோ
தொகைதொகையாய் நோய்நொடிகள்
வானில் நிலவுண்டு
வயிற்றுக்குச் சோறுண்டா?

நடையிலொரு தவவேகம்
நயனத்தில் புத்தநிழல்
குடிசைகளில் துறவுநெறி
குலமெல்லாம் சோகவெறி!
நாங்கள்
காட்டு மூலிகைபோல்
கண்டெடுக்க முடியாமல்
ஒட்டைக் குடிசைகளில்
உயிர்வாழும் நடைப்பிணங்கள்!

## ரத்த புஷ்பங்கள்

விண்மீன் முள்வெளியில்—மேக
வீதி இரவுகளில்
கண்மணிச் சொப்பனத்தில்—அந்தக்
காட்சி தெரிகிறது!

தேனீப் பாடகனே—ஒரு
தேவ வசந்தத்திலே
காணி நிலமண்ணில்—உயிர்க்
கனவுகளாய் மலர்ந்தோம்.

வியர்வை அழுத்தங்களால்—வான்
வீணை இசைநீரால்
கயல்விழிக் கண்ணீரால்—தோழர்கள்
காவல் நிதியானோம்.

நெருப்பு சிரித்ததுபோல்—இயற்கையின்
நாக்கு நீண்டதுபோல்
இருட்டு அழிந்ததுபோல்—எங்கும்
இரத்த புஷ்பமுலாம்.

பச்சை வரப்போரம்—இலைப்
பந்தல் நிழலோரம்
உச்சிக் கனவுகள்போல்—இரு
ரோஜாச் செடியுண்டு.

இலையுதிர் காலத்திலே—ஒரு
ஈர மழைப்பொழுதில்
கலைத்தவ ரோஜாக்களை—சிறு
கலகம் பிரித்ததடா.

தேனீப் பாடகனே—ஒரு
தேவ வசந்தத்திலே
காணி நிலமண்ணில்—உயிர்க்
கனவுகளாய் மலர்ந்தோம்.

வேம்பின் தேன்கூட்டில்—உன்
மெல்லிசைப் புதர்க்காட்டில்
தூங்கும் துளியெல்லாம்—எங்கள்
கண்ணீர்த் துளியன்றோ?

எங்கள் பூமியிலே—காற்றில்
ஏறிடும் பாடகனே!
எங்கள் குலம்தழைக்க—ஓர் முறை
இன்னிசை நீருற்று!

இல்லையெனில் உனது—மாய
இன்சுவைத் தேன்கூடு
கல்லறை யாகிவிடும்—எங்கள்
கண்ணீர் வற்றிவிடும்.

# செம்மண்*

செம்மண் பூமியில் கவிநடை லயங்கள்
ரோஜாப் பாதையில் விரக்தியின் முள்கள்.
ரோஜாப் பாதையில்...
பூமியின் நாண வர்ப்புகள்.

விழித்துச் சிவந்த துயில்கள்!
ஊமை மண்ணில்
யுகவழிக் கனவுகள்!
சிவப்பின்
தவங்கள்

செம்மண் பூமியில் கவிநடை லயங்கள்
ரோஜாப் பாதையில் விரக்தியின் முள்கள்.
பட்டின் முற்றல் பவளக் கல்லறை
மழை முன் உருகும் மாய மெழுகு

காற்று வடத்தில்
இழுபடாதிருக்கும் ரோஜாத் தேர்.
இரத்த ஓட்டமுள்ள உயிர்மண்

செம்மண் பூமியில் கவிநடை லயங்கள்.
ரோஜாப் பாதையில் விரக்தியுடன் முள்கள்.

---

* ஒரு செம்மண் பாதை வழியே தேனீர் அருந்தச் சென்ற போது உருவான மனக் கனவுகள்.

# அவர்கள் நீதிமன்றத்தை விசாரணை செய்கிறார்கள்

எனது சாட்சியம் :

தமிழ்க் காதலனைக அரும்பி ஒரு சோசலிஸ்டாக மலர்ந்தவன் நான். உழைக்கும் மக்களின் வசந்தருதுவை அவர்களுக்கு அறிமுகப்படுத்தும் ஒரு சின்னக் குயில். எனது பேனாவை அசைக்கின்ற போதே அதனுடைய ஆளுகைக்கு உட்பட்ட ஒரு பிரதேசம் இருக்கிறது என்கிற போதையோடு தான் நான் அசைக்கிறேன். என்றாலுங்கூட கர்வக் கனவுகளையெல்லாம் ஜீரணித்துக் கொண்டு, ஒரு வெறி மிகுந்த சிருஷ்டி தாகத்தோடு எனது மரணவேளையின் முன் நிமிஷம் வரையிலும்கூட எழுதிக் கொண்டிருக்கவே நான் விரும்புகிறேன்.

நீதி மன்றங்கள் போகிற போக்கைப் பார்த்து வெடித்துச் சிதறிய எனது மனக் குமுறல்கள் இங்கே வரி வடிவம் பெற்றுள்ளன. பேசப்பட்ட வார்த்தைகள் உரை நடையாகின்றன. மௌனம் தன் நிலையிலேயே அது ஒரு ஊமைக் கவிதை. அந்த மௌனம் தனிமையின் துணையில்... ஒலிப்பதற்குரிய நுடிப்புக்களைச் சுமந்து கொண்டு வரி வடிவம் பெற்றுவிட்டால் அது ஒரு ஜீவனுள்ள கவிதை. இந்த வசன கவிதைகூட நெடுநாட்கள் எனது மனமௌனமாக இருந்து கற்பனையில் ஊறிய பிறகு வரிவடிவம் பெற்றதுதான்.

நீதிமன்றங்களின் உயர்ந்த கட்டடங்களைப் பார்த்து விட்டுத் தெருவோரத்துப் பிச்சைக்காரிகளையும் அனாதைகளை யும், வாழத் துடித்த சில மாஜிக் கைதிகளையும் சந்தித்த போது எனது கண்ணீரின் வெப்பநிலை அதிகரித்திருக்கிறது.

அதைப் போலவே ஒரு மகத்தான தேசத்தின் சமூக ரீதியான மேடு பள்ளங்கள் தகர்க்கப்பட்டு, சோசலிசப் பூக்கள் மலர வேண்டுமென்பதற்காக எடுக்கப்பட்ட சட்ட ரீதியான அரசியல் முடிவுகளை, இந்த நீதி மன்றங்கள் நிரா கரித்தபோது எனது இரத்த ஓட்டத்தின் வெப்ப நிலை அதிகரிக்கிறது. என் கவிக்கோபம் நீதி மன்றத்தையே கூண்டிலேற்றியிருக்கிறது.

# 1. பிச்சைக்காரி

இரவுகூட விடியலில் மன்னிக்கப்படுகிறது!
இன்னும் நாங்கள் மன்னிக்கப்படவில்லை.

கால்நடைகள்
கட்டுத்தறிகளை நோக்கிப்
போவதைப் போல
நாங்கள் சிறைச்சாலைகளை நோக்கிப்
போய்க் கொண்டிருக்கிறோம்
எமக்கு......
இந்த உலகில் பெறுவதற்கு
என்ன இருக்கிறது......
கைவிலங்குகளைத் தவிர...?

உனது விசாரணையே ''கூண்டு''களில்
தொடங்கும் போது
தீர்ப்பு...
சிறைச்சாலைகளில் முடிவதில்
வியப்பொன்றும் இல்லை
நீ...நீதிதேவனின் ஆலயமென்று
நம்பினேன்

ஆனால், நீதிதேவனுக்கு
நீ வெறும் ''தபால் நிலையம்'' தான்!
முகவரியை மட்டும் பெற்றுவிட்டால்
வெற்றுத் தாள்கள்கூட

உனது அனுமதியோடு
நீதி தேவனைச் சந்தித்துவிட முடிகிறது.
இதோ! நானொரு பிச்சைக்காரி!

தர்மத்தால் எனது பிச்சைப் பாத்திரம்
நிறையும் முன்னால்
கைதிகளால் உனது சிறைச்சாலை
நிரம்பி வழிகிறது.
எனது தொட்டில் பருவத்திலேயே
நீ... .....
என் கைவிலங்கினைச் செய்தனையோ?
நான் அணியும் ஒரே நகை...
ஒற்றை வளையல்...
அது தான்.
அந்த வளையல் கூடச்
சங்கிலி போட்டிருக்கிறது.
ஆனால் நான்...?

இரவுகூட விடியலில் மன்னிக்கப்படுகிறது
இன்னும் நாங்கள் மன்னிக்கப் படவில்லை.
எமக்கு இந்த உலகில்
பெறுவதற்கு என்ன இருக்கிறது...
கை விலங்குகளைத் தவிர?

## 2. குடிகாரன்

மதுவே...ராஜ திரவமே!
மகா கவிகளின் தாய்ப்பாலே!
நீயொரு தேவதூதனின் பொன்சிறகென்றால்
இந்தக் கைவிலங்கு யாருடையது?
நீயொரு மௌன ராகமென்றால்
இந்த அழுகுரல் யாருடையவை
நீயொரு சொப்பன மென்றால்
தூக்கமற்ற இந்த
நெடிய இரவு யாருடையது?
சிற்பிகள் குடித்தால்
இன்னும் சில ''தாஜ் மஹால்கள்''
உருவாகலாம்.
சைத்ரீகர்கள் குடித்தால்
இன்னும் சில 'ரவிவர்மா' க்கள்
பிறக்கலாம்;
குடிகாரன் குடித்தால்
இன்னும் சில மதுக்கோப்பைகள்
காலியாகலாம்.

இந்தியாவில்

கங்கைவற்றிப் போனாலும்
மதுவெள்ளம் பாய்ந்துகொண்டுதான் இருக்கும்!

இங்கே...

இன்னும் சில ''தாஜ் மஹால்கள்'' உருவாகா
விட்டாலும்
இன்னும் சில 'ரவிவர்மா'க்கள் பிறக்காவிட்டாலும்.
இன்னும் சில மதுக்கோப்பைகளாவது
காலியாகட்டும்!

நீதிமன்றமே! நீ...

குற்றங்களை மட்டும் தண்டித்துவிட்டுக்
குற்றவாளிகளைக் காப்பாற்றுவாயா?
சிறைக்கதவு திறக்கும் போது
ஆத்மாவின் ஜன்னல் மூடிக்கொள்கிறது

பாவம் சிருஷ்டியின் வித்தல்ல.
கைவிலங்குகள் இல்லாத நீதி சபைகளுக்கு முன்பு
அது கைகட்டி நிற்கிறது.
ஓ நீதி மன்றமே!
பாவத்தின் கைகளில் விலங்கு பூட்டிவிட்டு
நீ ஏன் பாவமூட்டைகளைச் சுமந்துகொண்டிருக்கிறாய்?
காலதேவன் குயில்களுக்கு
வசந்தத்தைப் பரிசளித்துவிட்டு
பாலைவனத்தில் ஒட்டகம் மேய்க்கின்றான்.

ஏ...நீதி தேவனே
நீயாவது
பாலைவனத்து ஒட்டகப் பாதையிலும்
வசந்த மலர்களைத் தூவுவாயா?

புறவெளியில்...உனது சட்டநீதி
தற்கொலே முயற்சியைத் தடுக்கிறது.
ஆனல் அந்தப்புரத்தில்...
அது ஆயுள் தண்டனேயை நேசிக்கிறது.

நீ ஏன் இந்தப் புட்டிகளே வீசியெறிகிருய்?
இந்தச் சாராய சீசாக்களில்
கிராமங்களின்
சொப்பன கங்கையல்லவா
அடைப்பட்டிருக்கிறது?

இது கிளியோபாத்ராவின் கண்ணீர்
என்பதை நீ அறியாயோ?
.........இந்தக் கிளியோபாத்ரா
சீசருக்கும்
ஆண்டனிக்கும் மட்டுமல்ல
ரோமானியப் படைகளுக்கெல்லாம்
முத்தம் தருபவள்!

நாம்

பாண்டிச்சேரியைத் தலே நகராக்குவோம்!
பாலேவனத்திற்கு மட்டும்
மதவிலக்குச் சட்டம் போடுவோம்,
வேண்டுமென்ருல்...அங்கே
காந்திசிலே வைப்போம்,

ஒட்டகங்களோடு ஆடு வளர்ப்போம்
பேரீச்ச மர நிழல்களில்
மணிலாக் கொட்டை விதைப்போம்!

மது...அமுதமல்ல
அது...விஷமுமல்ல...
அமுதத்தில் விஷமிறக்கியபின்
அது என்னவாம்?

அமுதாகிய விஷ வேகமா?
செத்தபின்பு வரும் விழிப்பா?
நித்திரையின் விழிக்கூடா?
சுடுகாட்டுக் குழி மேல்
திண்ணை கட்டும் சித்தனு?

சுறுசுறுப்பா? இல்லை...
சோம்பலைத் தேரோட்டும் வான்சிறகா?
கொக்கோகத் தேனு
குற்றத்தின் உமிழ்நீரா?

மயிர்க்காலில் அணிவகுக்கும் சிப்பாயா?
இல்லை...மன்மதனின் வெறிநாயா?
மௌனமா? புலம்பலா?
மனக்குரலின் ஏகாந்த லாவணியா?

துயிலா? விழிப்பு நீச்சலா?
எச்சில் விழுங்கலா? இல்லை ரத்த ஜாலமா?
குடல் சட்டிக்குள்ளே
குதிரை ஓட்டமா?
காமக் குடைபிடித்துத் தள்ளாடும்
குற்ற உணர்வுகளின்
தேவதையா?

அக்கினிப் பூக்களின்
வசந்தருதுத் தேன்குடமா?
பசியின் பசியா?
ஒன்றை இரண்டாக்கும்
மனக்கணக்கின்
ஒற்றைக் கனவா?

மனமுதுகில் கற்பனை விரல்களின்
கையெழுத்து ஸ்பரிசமா?
எதுவென்றால் என்ன?
மாளிகைக்குப் ''பெர்மிட்டு''
சேரிக்கு மட்டும் கைவிலங்கு!

காந்தி வழி நீதியிலே
இன்னும்
பிரார்த்தனை மட்டும்தான் சேரியிலா?
தூக்கம் ''பீர்லா மாளிகை''யில் தானா?

வேண்டுமென்றால் இன்னுமொரு
காந்திசிலை வைப்போம்.
ஆட்டுப்பால் குடம் உடைப்போம்.
அந்தச் சிலைமேலே
வேர்க்கடலைத் தோலுரிப்போம்.

வேண்டுமென்றால் இன்னுமொரு
காந்திசிலை வைப்போம்!
எது செய்தால் என்ன?
மாளிகைக்குப் ''பெர்மிட்டு''
சேரிக்குமட்டும் கைவிலங்கு.

ஏ! நீதி மன்றமே
நீயொரு உதயரேகை என்றால்
இந்த அஸ்தமனங்கள் யாருடையவை?

நீயொரு தர்மராகம் என்றால்
இந்த அழுகுரல்கள் யாருடையவை?
ஏ...நீதி மன்றமே!
நீ நீதிதேவனின் பொன்சிறகென்றால்
இந்தக் கைவிலங்கு யாருடையது?

# புல்

வால் முளைத்த மண்ணே!
வசந்தத்தின் பச்சை முத்திரையே;
உடல் மெலிந்த தாவரமே;
உன்னைப் பனித்துளிகளின் படுக்கை அறை என்பேன்

நன்செய்த் தண்ணீரில் நனைந்து வளர்ந்து
நாள் தோறும் அறுவடையாகும் நாட்டியப் புல்லே!
பால் தரும் கால் நடைகளின் தின்பண்டமே;
பச்சை நிறத்தின் விளம்பரமே!

குசேலரின் உணவுக் களஞ்சியமே;
குதித்தாடும் கடல்நீரைக் காதலிக்காமலே
உப்புருசி பெற்றுவிட்ட
ஓவியப் புல்லே.

## நடை பாதை

மழைக் கால நரகம்
மாலை நேரச் சொர்க்கம்
வெயிற்கால நட்டுவனார்
வெண்ணிலவின் ஒளி வெள்ளம்
ஓடுகின்ற ஓடை; யாரும்
உரிமை கொண்டாடாத அனாதை மண்;
ஏழைகள் உறங்கிட இயற்கையால்
ஏற்படுத்தப்பட்ட புழுதிக் கட்டில்!

# தளிர்

இலைப் பிஞ்சு
விதைப் பட்டு
தாவர மின்னல்
வேர்த்தூரிகையின் ஓவியம்;

வசந்தம் ஏற்றும்
பகல் விளக்கு
தென்றல் குழந்தையின்
மரப் பாவை;

கிளைகளின் பொய்ச் சதங்கை
இயற்கையின் சொப்பனம்
சருகின் முளை.
முளையின் சருகு.

# புழுதி

ஏ! உதிரி மண்ணே
உன்னைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொள்ளும்
சூறைக் காற்று இதோ வந்து விட்டது!
சருகுத் துறவிகளுடன்
சம்பந்தம் வைத்துக் கொண்டு
குப்பைப் புராணம் வளர்க்கும்
குபேர அழுக்கே கொஞ்சம் இதைக்கேள்!
நண்பகற் பொழுதில் நீ
நடைபாதை நெருப்புத் தூள்!
ஆடி மாதத்திலோ விழிகளைத் தாக்கும்
ஆடிக் காற்றின் ஆயுதம்!
மங்கையர் கைமலர்களுக்குக்
காலை வேலை வைக்கும்
மண்ணின் சோம்பலே

மழைக் காலச் சேறு
உன் மறு பிறப்புத் தானே?
ஏழை உழவனின் மேலாடையே
ஏ! நாடோடி மண்ணே!

பாரெங்கும் பொதுவுடைமைக் கொடி
பறக்கும் போது
உன் மேனிக்கும் பச்சைப்பயிர்ப்
போர்வை கிடைக்கும், போதுமா?

## ரோஜாத் தோட்டங்களும்
## "புல்புல்" பறவையும்

ஒற்றைப் பிறையொளியில்—யுக
 ஓடைக் கரைவெளியில்
நெற்றித் துடிப்புகள்போல்—ரோஜாத்
 தோட்டம் அழுகிறது.

முன்னம் பனிஇரவில்—வசந்த
 மூலக் கனவுகளில்
சின்னஞ் சிறு'புல்புல்'—சிந்தும்
 சிந்துகள் அங்கில்லை.

மாலை நிழல் மடியில்—பன்னீர்
 மரத்தின் கண்ணீர்கள்
மூலைப் புதர்மீதில்—காற்றின்
 மௌன அழுகுரல்கள்.

காலத் திரைகளிலே—கால
 கால நிழல்களிலே
கோலச் சிறுதோட்டம்—பல
 கூறுகள் ஆகிறது.

கள்ளின் ஒளிவானில்—பிறையாம்
கள்ளத் தோணியிலே
உள்ளம் மிதக்கையிலே—இருளின்
உருவம் பெருக்கிறது.

ஒற்றைப் பிறையொளியில்—யுக
ஓடைக் கரைவெளியில்
நெற்றித் துடிப்புகள்போல்—ரோஜாத்
தோட்டம் அழுகிறது.

மின்னும் சிறுமீன்கள்—ஒளியில்
நீந்தி இருட்டழுக்கைத்
தின்று கொழுக்கிறது—விண்
தேக்கம் வெளுக்கிறது.

உச்சிப் பொழுதினிலே—தீ
ஓடை சுடுகிறது
பிச்சைக் கனவுகளோ—கண்
வீட்டில் அழுகிறது.

தேனீப் பாத்திகளும்—ரோஜாத்
தோட்டமும் பிரிகிறது
வானின் நிழல்மீதும்—மண்ணின்
முளைகள் தெரிகிறது.

வண்ணம் ஒருபிரிவாம்—உயிர்
வாசம் ஒருபிரிவாம்
எண்ணத் தொலையாமல்—கண்ணும்
பிரியும் பிரிவுகளாம்.

வேனில் வருகிறது—அது
வீணில் மடிகிறது
வானில் இசைமீட்டும்—மழை
நாளும் முடிகிறது.

கூதிர்ப் பொழுதுகளும்—இலை
கொட்டும் பருவங்களும்
ஆதிக்கவி 'புல்புல்'—இசையை
அழைத்து வரவில்லை.

ஒற்றைப் பிறையொளியில்—யுக
ஓடைக் கரைவெளியில்
நெற்றித் துடிப்புகள் போல்—ரோஜாத்
தோட்டம் அழுகிறது.

# ஒரு சேரிக்கிராமமும் தபால்காரனின் மரணமும்

மாசிப் பிறையடிக்கும்
ராத்திரிகள் சொல்லவேணும்
மசங்கலிலே விளையாடும்
மழைமேகம் சொல்லவேணும்.

எழுத்துச் சுமைகாரர்
எங்கஊரு தபால்காரர்
எழுத்துமங்கும் சாயங்காலம்
எமனோடு போனதென்ன?

தரை அழுகும் பறைச்சேறித்
தரைமெழுக வந்ததுரை
தரைக்குள்ளே போனதென்ன
தனித்தூக்கம் ஆனதென்ன?

நீண்டசையும் மருதாணி
நிழல் எழுதும் எழுத்தாணி
எழுத்தாணி சாய்ந்தபின்னால்
எங்கும்வெயில் வெள்ளெழுத்து.

தம்பிடிகள் சேர்த்துத்
தங்கரூபா உண்டு பண்ணி
முழுநெலாவில் கடைசேந்தோம்
முழுரூபாய் செல்லலியே!

தாளென்றும் கிடுகென்றும்
தலைச் சுமைகள் கொண்டு வந்தும்
கூரை நிலைக்கலியே,
சாரலுக்குப் பொறுக்கலியே!

ஊர்க்கோடிச் சாவடியில்
ஒளிவிளக்கு எரிஞ்சாலும்
விழிவெளக்கு எரியலியே
வியாசர்கதை முடியலியே!

கடுதாசி குடுத்தவுக
கைவீசிப் போனதென்ன!
காலன் எமராஜன்
ஏகநாட்டுப் பேர்வழியோ?

மசானத்துத் தீகூட
தபால் பெட்டி நிறமிருக்கும்
ஜனங்களெல்லாம் கடுதாசி
ஜனன மரணம் தபால்காரர்.

## ஊமை

நான் மௌன ஊர்வலம்
நாக்கின் மயான பூமி
கால்கை முளைத்த தூக்கம்
கவிஞனுக்கு நான் கண்ணீர் ஏரி
அழத் தெரிந்த ஓவியம்—நான்
அழகான சூனியம்
பாட்டுச் செடிகளால்
வார்த்தை முளைகளால்
இன்னும் தொடப்படாத
சதைப் பாலைவனம்.

வார்த்தைக் கனிகளை எச்சில் படுத்தாத
அழகின் ரசிகன் நான்.

கருத்தைச் சுமக்கும் வார்த்தை வாகனத்தின்
ஒருவழிப் பாதைநான்.

கண் மைக்கூடும் புருவ இறகும்
இணைந் திருப்பதால்தான்
கண்ணீர்க் கவிதையை
எழுதி எழுதி நான் மேற்செல்கின்றேன்
குருடு...படைப்பின் பகல் தூக்கம்
நானே...அதன் பகல் கனவு.

நான் மௌன ஊர்வலம்
நாக்கின் மயான பூமி.

## பகல் மேகங்கள்

வானச் சன்னிதியில் விடி
வெள்ளி விளக்கேற்றி
ஊனக் கருங்கலுக்கும்—ஒளி
ஓடம் சமைக்கின்றான்.

வசந்த கானங்களில்—அவன்
வார்த்தை படிக்கின்றான்
கசப்புகள் இனிப்பாகும்—பருவ
காலங்கள் ஆகின்றான்.

தேவ தினங்களிலே—விழித்
தேவன் மனங்களிலே
ஆவிக் கனவுகளாய்—ஓர்
ஆயிரம் படைக்கின்றான்.

நாவின் தொட்டில்களில்—அழும்
வார்த்தைப் பிள்ளைகளைப்
பூவின் குலமாக்கி—மௌனப்
புதையல் ஆக்குகிறான்.

சேரிக் காற்றினிலே—அவன்
பிரார்த்தனை நடத்துகிறான்
சூரியத் தேரேறி—அறத்
தீயை வளர்க்கின்றான்.

ஓலைக் குடிசைகளின்—தீப
ஒளிகளில் சிரிக்கின்றான்
ஏழை வியர்வைகளின்—துளி
எங்கும் அழுகின்றான்.

மின்னல் வேரோடு—மழை
முத்துப் பூப்பறித்து
மண்ணை மயக்குகிறான்—பகல்
மேகங்கள் ஆகின்றான்.

## வானவில்

இந்தப் பொல்லாத வானம்
மழையையும் தூறிக் கொண்டு
துணியையும் உலர்த்துகிறது.
நார்களின்றித் தொடுக்கப்பட்ட மாலைஇது
இதைத் தொடுக்கும் போதெல்லாம்
மழை நார்களை
வானம்
பூமியில் எறிந்து விடுகிறது.

இந்தப் புருவம் இவ்வளவு அழகாகப்
படைக்கப்பட்டதால்தான்
இதன் கண்கள் குருடாகி விட்டன.
இந்தப் பூப்பாலம்
வசந்த ருதுவை
மேலே—மேலே
அழைத்துச் செல்வதற்காகவா
அமைக்கப் பட்டது?

வெயில் மழையின்
இரட்டைத் தாக்குதலில்
இந்த முக்காடு யாருக்காகவாம்?

இந்தச் சிறகை உதிர்த்த
கிளி எது?
வேடன் யார்?
மானுடர்களின் ஆத்மாவிற்கு
வானத்தில்
கண்ணி வைத்தது யார்?
இது
வண்ணங்களின்
ஏழடுக்கு மாளிகையா?
அழகின் ஒற்றையடிப் பாதையா?

அடி நாட்களில்
வானம்
பறவைகளுக்கு அமைத்த
வரவேற்பு வளையமா?

இயற்கை
ஒரு தூரிகையை சிருஷ்டிக்க எண்ணி
ஒரு ஓவியத்தைச் சிருஷ்டித்தது.
அதுதான் வானவில்.
சொர்க்கத்திலிருந்து வீசியெறியப் படுகிற
துரும்பு கூட
அழகாகத்தான் இருக்கிறது.

# கடல்

இன்றைக்கு முன்னே
என்றோ—எப்போதோ
எத்தனையோ யுகம் முன்முன்னே
இங்கே பிறந்தேன்.

எனக்கு முன்னால் ஜனித்த பூமி
மணலாய் நரைத்து வெளுத்தாலும்
நீளக்குழ லோடிருக்கின்றேன்.

என்னுடைய நீளக் கார்குழலில்
ஏதோ சிறிதுநேரம் நான்
சூடி எறிந்த வாடற்பூக்களைத்தான்
'சூரிய-சந்திரர்' என்று சொல்கிறீர்!

எனக்கு வருகிற சிரங்குகள் மட்டும்
காற்றால் உடைந்துபோய் விடுகின்றன
நான்
நுரைகளைச் செலவு செய்துவிட்டு
முத்துக்களைச் சேர்த்து வைக்கிறேன்...

வானத்திற்கும் பூமிக்குமாக
மழை நெசவு நடந்த போது
அறுந்துபோன மின்னல் நூல்களை
நினைத்துத்தான்—நான்
அழுது கொண்டிருக்கிறேன்.

நான்

முத்துக்களின் பள்ளம்
கப்பலின் சமவெளி
நதிகளின் கல்லறை.

நான்

அடிக்கடி குரைக்கிறேன்.
காரணம்
நான் புயலின் வேட்டை நாய்.

# கண்

கண்கள்
இந்தப் பிரபஞ்ச
வனத்தின் பகல் பூக்கள்
இமைப் புதையல்
இதழ்க்
கொட்டாவி நாட்டியத்தின் நட்டுவனர்.

புருவக் கொடியருகே
பொன்னிமையின் உள்ளே
உருவாகிச் சுழலும்
உள்ளத்தின் உத்திரைகள்.

ஆத்மாவின் பூவில்
அள்ளி வைத்த தேனை
உப்பென்று துப்பும்
ஊமை வண்டுகள்
மண்மேல் முதன்முதலில்
மனிதன் நடைபோடப்
பாதை சொல்லித்தந்த
பால தீபங்கள்.

தாய்க்கருவின் பூங்காவில்
ராஜ வசந்தத்தில்
முகையாகிப் பூத்தவைகள்
மௌனத்தின் பகல் வேளைச்
சொப்பனங்கள்.

பகல் இருட்டைப் பார்ப்பதற்குப்
படைத்தவனே ஏற்றிவைத்த
பாவைவிளக்குகள்.
குருட்டுக்குப் பொட்டு வைத்த
கோல ஒப்பனைகள்.
கலைப்பார்வைச் சிகரங்கள்
கண்ணீரின் பிரும்மாக்கள்.

இமைத்தாளம் கொட்டியொரு
இசை லயத்தில் சதிராடும்
மௌன நடனங்கள்
மனநாட்டின் தூதுவர்கள்

இரைதேடி மனப்பறவை
என்றோ திறந்து வைத்த
இரு வாய்கள்
முகவிளக்கின் இருசுடர்கள்
காற்றால் அணைகின்ற
கைவிளக்குப் பலவுண்டு—
இவையோ—மூச்சுக்
காற்றின்றி அணைகின்ற
கண்விளக்கு!

# வானம்பாடி

ஆளுக்கு இரண்டு
பிச்சைப் பாத்திரங்களை
வைத்துக்கொண்டு
நீங்கள் என்னிடம் யாசிக்கிறீர்கள்!
நான் கால்களால் நடக்கிறேன்
சிறகுகளால் ஓடுகிறேன்
எனது சிறகுகளில் சங்கீதம்
திக்விஜயம் செய்கிறது.

நான்

நட்சத்திரங்களைப் பார்த்து விட்டுப்
புழுக்களைச் சாப்பிடுகிறேன்

நான்

மண்ணிலிருந்து விண்ணுக்கு
முதல் யாத்ரீகன்
ஆகாய நீச்சலின் ஆசான்
பூமிக் குழந்தை—
புவியீர்ப்புக் கயிற்றில்இழுக்கும் பட்டம்

நான்

முதன்முதலாக வானத்தில் பாடிய
போதுதான்
அதற்கு மேலேசொர்க்கம் இருப்பதாக
நீங்கள்பேசத் தொடங்கினீர்கள்.
என்னைப் பிடிப்பதற்காக
மேகராஜன் பின்னிய கண்ணிதான்
வானவில்

நான் காதலைப் பாடுகிறேன்.

எனவேதான்
முறிந்த சிறகுகளால் கூடு கட்டுகிறேன்.

## கல்லறைத் தொட்டில்

மின்மினி இரவின் பின்பனிக் காற்றில்
வெண்பனி அழுத புல்வெளி யருகே
அலைக்கொடி மீதில் நுரைப்புக் கூட்டம்
கலைஞன் வாழ்வின் கனவுகள் போலப்
பூத்துப் பூத்துப் பாழில் அடங்கும்
அவலப் பொழுதில்...
அதோ! அந்தக் கடற்கரையருகே
அவன் தூங்குகின்ருன்.

ஒளிமழை தூவும் முழுநிலா நாளில்
சிந்தனை நெருப்பாய்த் திருவிட மக்களைச்
சந்தித் திடல்களில் சந்தித்து விட்டு
அதோ அந்தக் கடற்கரையருகே
அவன் தூங்குகின்ருன்.

உச்சிவெயிலிலும் ஊர்வலம் நடத்தி
விடுதலைக் கொடியின் சின்ன நிழல்களைப்
பார்த்துப் பார்த்துப் பசியை மறந்தான்!
காற் சதங்கை கட்டிய ஆட்டக் காரிபோல்
கைவிலங் கேந்திடக் காதல் கொண்டான்.
மின்மினி இரவின் பின்பனிக் காற்றில்
வெண் பனிஅழுத புல்வெளியருகே—
அதோ! அந்தக் கடற்கரையருகே
அவன் தூங்குகின்ருன்.

## அடிநாளின் வசந்தங்கள்

அடிநாளின் மனக்கனவு வசந்தங்கள்
அதோ அந்தப் பாலைகளில் மலர்கிறது
விடியாத துருவஇருள் சிரிக்கிறது
வியத்நாமின் ரத்தநதி வெளுக்கிறது
அடிநாளின் மனக்கனவு வசந்தங்கள்
அதோ அந்தப் பாலைகளில் மலர்கிறது.

அன்றொருநாள் மகிழமரச் சன்னதியில்
ஆயிரமாய்ப் பூமலரும் மண்ருதுவில்
ஆத்மாவின் வசந்தங்கள் தேடியே
ஆக்கினைகள் செய்திறந்த தோழரே
அதே வசந்தம் வந்ததே—எம்
விழிநீர் மலர் சிந்தவே.

அடிநாளின் மனக்கனவு வசந்தங்கள்
அதோ அந்தப் பாலைகளில் மலர்கிறது.
சரித்திரத்தாய் விழிநீரின் கடல்வெளியில்
சமர்வளர்த்த உயிர்த்துடுப்பின் படகுகளே
ஆத்மாவின் ராகங்கள் பாடியே
அலைமடியின் கல்லறையில் தூங்கினீர்
அதே கடற்கரை வந்ததே—எம்
விழிநீர் மலர் சிந்தவே

அடிநாளின் மனக்கனவு வசந்தங்கள்
அதே அந்தப் பாலைகளில் மலர்கிறது.

திசையெல்லாம் கிழக்காக்கும் யுகக்கொடியின்
நிழல்வழியே இளைஞர்படை நடக்கிறது
ஆத்மாவின் வசந்தங்கள் தேடியே
ஆக்கினைகள் செய்திடுவோம் இளைஞரே
அதே வசந்த மண்ணிலே—தோழர்கள்
அழுது தாலாட்டத் தூங்குவோம்
அடிநாளின் மனக்கனவு வசந்தங்கள்
அதோ அந்தப்பாலைகளில் மலர்கிறது .

## "நாம் வானத்திற்குக் கீழே வாழ்கிறோம்"

(நிசப்தமான பல இரவுகளை, உலக ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் ஒரு மகாகவிதையை எழுதும் வெறியில் அதனுடைய, சொப்பனவஸ்தைகளில் கழித்த பிறகு, ஒரு இளங்காலை நேரத்தில் அந்த மகாகவிஞனின் பேனா அசைகிறது. இரத்த ஓட்டத்தையே மது வெள்ளமாக மாற்றி விட்ட போதைக் கனவுகளோடு அந்தக் கிறுக்கன் எழுதத் தொடங்கி விட்டான். ஓ! உலகமே, உன் மகனின் கதையைக் கேள்.)

விடியல் பனித்துளி மிதிபடவே—அவர்
விடுதலைக் கனவுடன் வருகின்றார்
கொடிய இனவெறி நஞ்சையெல்லாம்—அள்ளிக்
குடித்தவர் சமுத்திரம் போல்திரண்டார்.

சாலைப் புழுதியில் துயில்வளர்த்து—வான
சந்த்ரிகையில் தம் முகம் பார்த்து
காலை வெயிலில் நெருகேறி—வருங்
காலத்தைப் பார்த்திட வருகின்றார்.

ரஷ்யர்கள் சீனர்கள் ஆங்கிலவர்—என்
ரத்தத்தில் வாழ்ந்திடும் தாய்நாட்டார்
முஸ்லிம்கள் அமெரிக்கர் கீழ்நாட்டார்—ரத்த
முத்திரை வியத்தாம் கண்மணிகள்

தென்றல் நடையுடன் வருகின்றூர்—நம்
தேச மதில்களைத் தூள்செய்தே
ஒன்று உலகெனக் குரல்எடுத்தார்—இது
ஊழி வரைநிஜம் எனமுடித்தார்.

(பேதா பேதங்களை மறந்துவரும் ஜனவெள்ளம் வசந்தத்தின் மடியில்.........எழுதிக் கொண்டிருக்கும் மகா கவிஞனைச் சந்திக்கிறது.)

மக்கள்: யாரது எங்கள் கவிமகனு? மன
யாகம் நடத்திடும் உள்மனமா?

மகாகவிஞன்: ஓகோ! மானுட சமுத்திரமே! நும்
தொடுவானம் நான் பேசுகிறேன்
எப்படி இப்படி உருவானீர்! நீர்
எப்புறமிருந்து வருகின்றீர்?

மக்கள்: எங்கள் நாடாம் சிறைநீங்கி—மண்
எல்லைகள் என்னும் விலங்குடைத்து
சங்கம மானேம் அன்றெருநாள்—ஒரு
சரித்திர மானேம் இன்றையநாள்.

இலையுதிர் காலப் பிறையிருட்டில்—இந்த
ஏழை பூமியின் மண்வெளியில்
கொலைவெறிப் போர்கள்! பிணமலைகள்!—அதன்
குன்றுகள் வளர்த்த செந்நதிகள்!

பகலும் இரவும் பொய்யாக—தாய்ப்
பாலுடன் பிஞ்சுகள் தலைசாய
குவிந்த ஆயுதம் பாழாக—நாங்கள்
கூடி அணைத்தோம் போராட

கூடி அணைத்த அப்பொழுதே—நெஞ்சக்
கூட்டில் உறங்கிய மானுடப்புள்
பாடி மகிழ்ந்தது! கண்ணீரில்—எம்
பால்யம் சிரித்தது ஒன்ருனோம்.

பூமியின் குழந்தைகள் தலைநிமிர்ந்தோம் ஒரு
பூத்துணி கொண்டே கொடிசெய்தோம்
பூமியில் ஓடிய செந்நீரில்—நிறப்
புதையல் எடுத்தே அதைநனைத்தோம்.

(வசந்தத்தில் பூத்த புஷ்பங்கள் சிரிக்கின்றன. ஜன வெள்ளம் தாங்கியிருக்கும் பிணமலைகளைக் கவிஞன் அடக்கம் செய்கிறான்.)

மகா கவிஞன்: கண்மணி காள்என் கண்மணிகாள்
—போர்ப்
பாதைகள் நெளியும் பிணமலைகள்
உண்மையில் இனமத வெறிப்
பிணங்கள்—அவற்றை
ஓடும் நதிகளில் எறிந்திடுவீர்.

உப்புக் கடலுக்கு விருந்திடுவீர்—இனி
ஒன்று உலகெனக் கவியிசைப்பீர்
ஒப்பாரிக்கு விடைகொடுத்தே—வசந்த
ஒப்பனை ஏற்றாள் நம் அன்னை.

(அப்பொழுது வானம் பொழிகிறது. 'கவி' பாடுகிறான்.)

வானின் கீழ்நாம் வாழ்கின்றோம்—முத்து
மழையினில் அன்னை குளிக்கின்றாள்
கானம் இசைப்போம்! பறவைகளே—நம்
கண்மணி மண்ணில் விண்செய்வோம்.

வான்மேல் எல்லைக் கோடில்லை—அங்கு
வருவது மின்னல் கோடொன்றே
வானை மின்னல் பிரிப்பதில்லை—அது
வானை அறிமுகம் செய்கிறது.

குடையே மழையைப் பொழிந்துவிட்டால்—அதில்
குளிப்பதைத் தவிர வழியேது?
குடைவான் மகளே அழு இனிமேல்—எம்
குலமகள் சிரிப்பாள் அழமாட்டாள்.

(பாடிக்கொண்டே கவி கீழே சாய்கிறான். வானமே பால் வார்க்க அவன் வாழ்வு முடிந்து விடுகிறது. அவனுடைய கையேட்டில் ''நாம் வானத்திற்குக் கீழே வாழ்கிறோம்'' எனும் கவிதை முடியாத நிலையில் இருக்கிறது. அதை ஒருவன் உரத்த குரலில் பாடுகிறான். ஜன வெள்ளம் எதிரொலிக்கிறது. யுகம்யுகமாக அப்பாடலை உலககீதமாக ஏற்றுக்கொள்ளச் சபதம் ஏற்கிறது. ஓ! உலகமே! உன் மகனின் பாடலைக் கேள்.)

## என்னுடைய கனவு பூமியில்

(விடியலின் முன்நேரம். எனது கனவு பூமியின் நதிக்கரை அது. ஒரு சுரபுன்னை மரத்தின் சின்னஞ் சிறிய நிழல் மடியில்...கிழட்டு எருமை...நிழலையே சேருக நினைத்து மகிழும் அதனுடைய ஊமைக் கனவுகள்.)

சோக தேவனின் ஆலயத்தில் ஒலிக்கும் பிரார்த்தனைப் பாடலாக எங்கிருந்தோ மிதந்து வரும் ஒற்றைக் குயிலின் கீதலயம்.

ஓ! அந்தப் படருத் துறையருகே...

அவன் எங்கள் தேசத்தின் மகாகவி...தோழன் பாரதி!

பாரதி பாடுகிறான்:—

**என்னுடைய மனவீட்டின்**
**கவித் தீயை**
**எங்கிருந்து ஊதுகிறாய்?**
**உன்னுடைய கீதத்தின்**
**வசந்தமலர்**
**உயிர் நாரை அலங்கரிக்க**
**என்னுடைய சிறுகுயிலீ!**

எங்கிருந்தோ...
எங்கிருந்தோ...கூவுகிறாய்?
என்னுடைய மன வீட்டின்
கவித் தீயை
எங்கிருந்து ஊதுகிறாய்?

(மாந்தோப்பு...வைக்கோல் போர்த்த சிறு குடிசையில் மகாவீரன் லெனின்...அறுவடைக் காலத்தில் குதூகலத்தோடு பெண்கள் பாடும் பாடல் அக்கரை வயல்களில் ஒலிக்கிறது.)

## வயல்வெளிப் பாட்டு

ஊரோரம் கிளிக்காடு
ஒவ்வொண்ணும் பஞ்சவர்ணம்
பஞ்சவர்ணக் கிளியுறங்கப்
பழத்தாலேகூடு செய்தோம்.
பழத்தாலே கூடு செய்து
பவுர்ணமிப்பூ மெத்தையிட
கிழக்கே புயலடிக்க
கிளிச்சிறகு பறந்தோட
கிளியோ கிளி
பொலியோ பொலி
ஓ! பொலியோ பொலி

(கிழட்டு எருமை பிணமாகிக் கிடக்கிறது. சுரபுன்னேயின் கிளேயில் அமர்ந்தபடி குயில் மரண கீதம் இசைக்கிறது.)

உறங்கிவிடு! உறங்கிவிடு!
யுகத்தீயின் காலடியில்
சுவாசத்தின் சாம்பலுடன்
உறங்கிவிடு
உறங்கிவிடு

இந்நாளின் நினேவுகளில்
இந்தநிழல் சத்திரத்தில்
என்னுடைய யாத்திரையின்
இறுதிவரை
பாட்டிசைப்பேன்

இதே நாளில்
இந்தநிழல் சத்திரத்தில்
இறுதிவரை பாட்டிசைப்பேன்.
உறங்கிவிடு
யுகத்தீயின் காலடியில்
சுவாசத்தின் சாம்பலுடன்
உறங்கி விடு.

(அந்தி நேரம்...பாரதி அங்கு வருகிருன். குயிலுக்கு ஆறுதல் கூறுகிருன். எல்லேயற்ற கீதப் பெருவெளி யில் இருவரும் உறவாடுகின்றனர்.)

பாரதி :— கண்ணீரின் மலர் சிந்தும்
கவிமரம் நான்
உனக்காக.
கைக்கிளைகள் உனக்காக
காதலெனும்
பொன்கூடும்
கண்மணியே உனக்காக.

குயில் :— என்னுடைய பிரும்மாவே!
உன் தோளில்
உன் பாட்டில்
உன்னுடைய வசந்தத்தில்
உன்னுடைய
அடைக்கலம் நான்
உன்னுடைய கவி நிழல் நான்

(தோளில் குயிலோடு பாரதி தோப்பில் இளைப் பாறச் செல்கிறான். அங்கே லெனினைக் காண்கிறான், தோளில் குயிலோடு பாரதி-தோளில் மண்வெட்டியோடு லெனின்-நான்கு விழிகளின் ஆனந்தக் கண்ணீர். காவிரி-வால்கா நதிகளின் சங்கமம். பாரதி உருக்கத்தோடு பாடுகிறான்.)

பாரதி :— கண்ணீரின் சாட்சியமாய்க்
கவியிதனைப்
பாடுகிறேன்

பிறை நிலவின் காலடியில்
பின்னிரவில்
பாடுகிறேன்.
சோவியத்தின் ஜீவநதி
யாருடைய
பெயர்ப் பாட்டை
ராகமுடன் இசைக்கிறதோ
அந்நாட்டுப் பனிமலைகள்
ஆருடைய பேர் கேட்டு
ஆறுகளாய்
உடைந்துருகி
ஆவி சிலிர்க்கிறதோ
இறந்ததற்குப்
பின்னும்
ஏழைகளின் ரொட்டிகளாய்
இப்புவியில்
நாள்தோறும்
எவன் பிறவி எடுப்பானோ
அன்னவனின்
கைத்தலத்தில்
ஆவியெலாம் பாட்டாக்கி
அறிவுக்கு உயிரூட்டும்
பாரதி நான் பாடுகிறேன்.
பிறை நிலவின்
காலடியில்
பின்னிரவில் பாடுகிறேன்.

(அப்போது உழவர்கள் லெனினைக் காண வருகின்றனர். பாரதியிடம் தங்கள் வர்க்கமற்ற சமூக அமைப்பை விளக்கு கின்றனர். பாரதி உற்சாக வெள்ளம் கரை புரண்டோட மீண்டும் பாடுகிறான்).

பாரதி :— இறந்ததற்குப் பின்னாலும்
ஏழைகளின்
ரொட்டிகளாய்
இப்புவியில் நாள்தோறும்
எவன் பிறவி
எடுப்பானோ
அன்னவனைப் பாடுகிறேன்
பிறை நிலவின் காலடியில்
பின்னிரவில் பாடுகிறேன்

(சுரபுன்னை மரத்திலிருந்து குயிலின் கீதம் கேட்கிறது. ஆனால்...அது குயில் தனது நண்பனுக்காக முன்பு பாடிய மரண கீதமல்ல. ஆம்...அப்போது உழவர்களின் களத்து மேட்டிலிருந்து ஒரு புதிய ஜீவனின் அழுகுரல் கேட்டுக் கொண்டிருந்தது.)

# மலர்கள்

ஓ...வசந்த புத்ரிகளே!
எங்களுடைய பூமித்தாய் ஏந்தும்
வர்ணஜால தீபங்களே!
எங்களைப் பாடவைக்கும் மௌனங்களே!
உங்களால் மட்டும் சப்திக்க முடிந்தால்...

ஒரு பாடும் ரோஜா
பிரார்த்திக்கும் அல்லி
முணுமுணுக்கும் தேன்மலர்
எத்தனையோ அதிசயங்கள்
நிகழ்ந்துவிடும்
நீங்கள் கனவின் சிறகுகள்
அதனால்தான் உதிர்ந்து போகிறீர்கள்.
கொடியில்...ஊமைச் சதங்கைகள்
மரத்தில்...காற்றுவெளிப் புன்னகைகள்
தண்ணீரிலோ...நீங்கள் ஜுவாலைகள்.

சொர்க்கத்தைப் பார்த்துவிட்டு சொக்கிக் கிடக்கிற பூமிதேவி யின் கண்கள் நீங்கள்.
அரும்பின் ரகசியங்கள்
......அதிசயங்கள்.

சூரியனுக்காக நீங்கள்
தயாரித்த தாகமாத்திரைகள்தான் பனித்துளிகள்

உங்கள் சுயசரிதத்தைச்
சருகுகளில் தரிசிக்க முடிகிறது.

உங்களை உட்காரவைத்துவிட்டு நறுமணம்
திக்விஜயம்செய்யப் புறப்பட்டு விடுகிறது.

சிலரை மகாகவிகளாக ஆக்குகிற நீங்கள்
சிலரை வியாபாரிகளாகவும் ஆக்கிவிடுகிறீர்கள்!

வண்டுகளின் பாடலை அரங்கேற்ற
கவிதைகளால் சிருஷ்டிக்கப்பட்ட
மேடைகள் நீங்கள்.

கனவுநாட்டின் விளையாட்டுப் பிள்ளைகள்.

கனிகளின் சமிக்ஞைகள்

நீங்கள்
சொர்கலோகத்துச் சுவடுகள்.

ஆனால்
மண்ணிலேயே உங்களைப் பார்க்க முடிகிறது.

தேனீக்களின் முணுமுணுப்பில்
உங்கள் மௌனம்...
ஓ......எவ்வளவு அழகாக இருக்கிறது!

காலதேவன்
மண்ணைப் பிசைந்து செய்யும்
காதல் திருவோடுகள் நீங்கள்.

புயல் வீசும் போதெல்லாம்
உங்கள் இலைப்பல்லக்கு சிதைந்து விடுகிறது
அதனால்தானு தென்றலிலேயே நீங்கள்
உதிர்ந்து விடுகிறீர்கள்:

காலதேவனின் பிரஜைகளே!
நீங்கள் பூமி முழுவதையும்
வெற்றி கொள்ளும்போது
பூமி உங்கள் தலைநகரமான
வசந்த காலத்தையே அழித்து விடுகிறது.
ஓ...வசந்த புத்திரிகளே...
உங்களால் மட்டும்
சப்திக்கமுடிந்தால்...

## நான் மரணத்தைப் பற்றிச்
## சிந்திக்கிறேன்

சூரியாஸ்தமனம் கழிந்த பிறகு
சாம்பல் இரவில்
யுகங்களாக விசுவரூபமெடுக்கும் .
இந்த நிமிடங்களில்
நான் மரணத்தைப் பற்றிச் சிந்திக்கிறேன்.

இந்தப்
படகுத்துறைக்கு
நான் துடுப்புகளோடுதான் வந்தேன்.

ஆனல்
எனக்குக் காகித ஓடங்களே கிடைத்தன.

இந்த
இசைமண்டபத்திற்கு—
நான் பாடல்களோடுதான் வந்தேன்
ஆனல் இங்கே
செவிடர்கள் மட்டுமே இருந்தார்கள்.

இந்தப் பாதைக்கு
நான்
ஒருநல்ல வழிப்போக்கனுகவே வந்தேன்

ஆனால்
இது ஒற்றையடிப்பாதை.

எல்லாம் முடிந்து விட்டது.
இந்த மண்ணில்
இனிநான் நேசிப்பதற்கு
'ஆஸ்த்மா' மாத்திரையைத் தவிர
வேறு என்ன இருக்கிறது?

இனியொரு
மறுவிடியலில்
என்னுடைய பாடல்
இந்த ரோஜாக்காடுகளில் ஒலிக்காது.

என்னுடைய பால்யகாலங்களை
நான் இழந்ததைப்போல
நீங்கள் என்னை இழக்கப்போகிறீர்கள்.
வயோதிகத்தையும் முந்திக்கொண்டு
மரணம்
என்னைச் சந்திக்க வருகிறது.
நான்
என்னுடைய சுவாசப்பைகளைப்
பட்டினி போட்டுவிட்டு
மரணத்திற்கு விருந்துவைக்கப் போகிறேன்.

என்னுடைய மரண ஊர்வலத்தில்
சாவுப் பறைகளை முழக்கவேண்டாம்
சின்னச் சின்னப்
புல்லாங்குழல்களை ஊதுங்கள்

என்னுடைய உடலை
ஒருசேரியில் அடக்கம் செய்துவிடுங்கள்.

எனது கல்லறைக்கு அருகில்
ஒரு சாக்கடையும்
கொசுக்களின் ரீங்காரமும் இருக்கட்டும்.

ஏழைகளின் கவியை
அவர்களுடைய சுடுகாட்டினிடமே
பத்திரமாக ஒப்படைத்துவிடுங்கள்.

''சிவப்புவசந்தம் வருவதற்குமுன்
உங்கள்குயில் இறந்துவிட்டது'' என்று
அவர்களிடம் சொல்லிவிடுங்கள்.

எனக்குப் பிறகு
உங்களைத் தேடிவருகிற கவிகளைத்
தயவு செய்து
கல்யாணப் பந்தலில்மட்டும்
உட்காரவைத்து விடாதீர்கள்.

பாரசீகத்துப் 'புல்புல்' பறவைகளுக்கு
என்னுடைய மரணச் சேதியை
அறிவித்து விடுங்கள்.

நாளைக்கு உதயமாகப் போகும்
பிறைச் சந்திரிகைக்கும்
நட்சத்திர புஷ்பங்களுக்கும்
ஆறுதல் கூறிவிடுங்கள்
உங்களைச் சந்திக்கிற
வழிப்போக்கர் களிடமெல்லாம்
''மிகச் சின்ன வயதிலேயே
ஒருஞானியைப்போல எழுதியவன்
மிகச் சின்ன வயதிலேயே
ஒரு கிழவனைப்போல்—மரணமாகி விட்டான்''
என்பதை மட்டும் சொல்லுங்கள்.
எனக்காக யாரும் அழவேண்டாம்.
ஆனால்;

எனது கல்லறையை மட்டும்
பன்னீர் மரங்களின் நிழலில்
எழுப்பி விடுங்கள்.
எனக்காக யாரும் அழ வேண்டாம்.
பன்னீர் மரங்கள்!
அந்தப் பன்னீர் மரங்கள்!

## ''முல்லை நதிக்கரை வயல்களுடன் ஒரு மறு விவாதம்''

(கல்லூரியின் 'ஸ்ட்ரைக்' விடுமுறை நாட்களில் ஒரு ஞாயிற்றுக் கிழமையின் சந்தியாகாலத்தில், கவி — முல்லை நதிக்கரையில் — வயல்களோடு விவாதிக்கத் தொடங்குகிறன், மறுநாள்—ஒரு மறு விவாதம் வளர்கிறது. வயல்கள் ஒரு சபதம் ஏற்கின்றன, இந்தக் கவிதையை ''சோசலிசக் கனவுகளின் முதல் பிரசவம்'' என்றுகூட நீங்கள் அழைக்கலாம்.)

முன்முன்னே
அன்ருெருநாள்
முதல்பருவ மழையிரவின்
முன்னிரவில்
எம் சேற்றில் விதைத்தது யார்?
எம்மையிந்தச்
சந்திரிகைப்
பந்தலின்கீழ்
சதிராட வைத்ததுயார்?
...............

சூனியத்தை
மண் திரையில்
துலங்கவைத்த தூரிகைகள்
சேரிகளின் மூலிகைகள்
சிறுவிழியின்
உப்புநதி ஓடங்கள்
வேர்வைமல பிரும்மாக்கள்
விதிக்குரலின்
ராகவழிப்
பாடகர்கள்
...............

கறுப்பு நிலாப் பிறைபோலும்
கருக்கரிவாள்
அசைந்துவர - எம்
கன்னி அறுவடைக்குக்
காரணமாய்
அமைந்ததுயார்?
...........

கைகளையே பாடவைக்கும்
கைவளையல்
கன்னியர்கள்!
கண்ணீரின் ஜீவநதி
காலமெலாம்
பாட்டிசைக்கும்
மனிதபுரிச் சமவெளிகள்.

வெயில்மீதும்
கரிபூசும்
வித்தை பெற்ற புத்திரிகள்
மதனபுர வீதியிலே
சேகரித்த
குப்பைகள்தான்...ஆனால்
சேரிகளின் தேவதைகள்
...............

உழைப்புக்குத்
திரைபோட்டு
உருமுதலின்
சுவடழித்து
ஒப்பனைகள் செய்ததுயார்?
...............

மானுடவர் பிரார்த்தனையில்
வேதம் ஓதும்
வர்க்கவெறிச் சைத்தான்கள்
முதலாளித்துவ புலியை
மூடிவைத்த கூண்டுகளாய்
முளைத்தவர்கள்

''மூலதனப்'' பெருங்காற்றில்
மூடுதிரை
போட்டவர்கள்

சோற்றையெலாம் மறைத்துவிட்ட
பூசணிகள்.
சோதரர்க்கு விலங்கிட்டு
ராஜமுடி சூடியவர்.

பாழூரின் தலைநகரம்
பசிப்பிணியின் கிருமிராஜ்யம்!
சாகாத வரம்பெற்ற
சரித்திரத்தின் பொன்னேட்டை
அரிக்கவரும்
அறியாமைக் கரையான்கள்!
காலநதி அலைவீச்சில்
நுரையாகப் போகிறவர்!
நூற்றாண்டு வசந்தமெலாம்
பிணமாலை
தொடுத்தவர்கள்!
...........

காலமெனும் பெருவெளியில்
காற்றைப்போல்
நீரைப் போல்
சோறிடுவோம்.
எங்கள் சபதம் இது—
''ஏழைகளின் அடுப்பெரிப்போம்
இல்லையெனில் சூரியனில்
தீக்குளிப்போம்''.

## ஓ...! நானும்
## அந்த ஹிப்பிகளோடு...!

பௌராணிகரின் நீதிகளைப்
பழங்காற்றில் விட்டெறிந்து...
பனித்தென்றல் விசிறலிலே...

''கோவா''வின் பொன் தூசிக் கடற்கரையில்
கொழுத்தநிலாப் பால்விழுந்த
இருள் விஷத்தில்...

இன்னுமிந்த உலகத்தின்
எல்லையெலாம் இருக்கின்ற
வெட்டவெளிச் சொர்க்கத்தின்
வீதிகளில்...

நாத மதுவின் கோப்பைகளோடு...
ஓ...நானும் அந்த ஹிப்பிகளோடு...

∴ ∴ ∴

சூரியனால் கற்பிழந்து
நிலவுடனே முதலிரவு
நாளென்னும் தேவதையே உன்னுடைய
நாயகனார் மஞ்சமிது!

காலவெள்ள நதிக்கரையின் நிலவொளியில்
சாவுத்தீக் குளியலின்பின்
ஜனித்த அழுக்குருண்டை சாம்பல்மண்.

இங்கிருந்து விடைபெற்று மறுபடியும்
இதற்குள்ளே வந்து—இதன்
மோன வெளியில்—ஒரு
முடிவில்லாச் சித்தசுக ஒத்திகையில்
'எல்.எஸ்.டி' மாத்திரை வரத்தில்
எச்சிலே மதுவாகும்
இன்பக் கடற்பரப்பில்
நாதக் கனவின் தோணிகளோடு...
ஓ...நானும் அந்த ஹிப்பிகளோடு...

மானிடத்தின் சோலைகளில்...
பிரக்ஞையெனும் மனப்பயணப் பாதைகளில்...
காதலித்துக் காதலித்து...
காதல் சுவாசத்தைக்
காற்றைப்போல் யாத்ரீகருக்கி

நாடு,மொழி,இனம்,சாதி என்னும்
நான்கு சுவர்க்கப்பால்—
நாத விரல்களின் தீண்டுதலோடு...
ஓ...நானும் அந்த ஹிப்பிகளோடு...
ஓ...நானும் அந்த ஹிப்பிகளோடு

## விலை மகளிர்

நாங்கள் ரஜனியின் மக்கள்
மன்மதனின் ஒற்றர்கள்.
கற்புச் சிறையை உடைப்பதால்
கைதுசெய்யப் படுகிறோம்.

பாற்கடல் அமுதத்தை தேவர்கள் சுவைத்து
விட்டதால்தான்
எங்கள் இதழ் அமுதத்தை அரக்கர்களுக்கு
வழங்குகிறோம்

எங்களுடைய நீதிமன்றத்தில்தான்
ஒழுக்கம் தண்டிக்கப்படுகிறது.

நாங்கள் நிர்வாணத்தை விற்பனை செய்கிறோம்-
ஆடை வாங்குவதற்காக.

எங்களால்
படுக்கை...தொட்டிலின் விசுவரூபமாக
மாறுகிறது

நாங்கள்
மன்மத அச்சகத்தின் மலிவுப் பதிப்புகள்.

எங்கள் புன்னகைகளுக்குச்
செயற்கைப் பிரசவம் ஏற்படுவதால்தான்
எங்கள் கண்ணீர்த்துளிகளுக்குச்
செயற்கை மரணம் சம்பவிக்கிறது.

எமது கண்களின் சிவப்பில்
துறவிகளின் காவிஉடைகள் தெரிவதாகச்
சிலர் சொல்கிறுர்கள்.

நாங்கள் சீசர் காலத்தில் பிறந்திருந்தால்
போப்பாண்டவர்களிடம்
பாவமன்னிப்புப்பெறத் தேவையில்லை.

தர்மராஜர்களே!
நீங்கள் எங்களிடம் மட்டும்தான்
நிதிவசூல் செய்யவில்லை...

எனவேதான்
இன்னும்
பாஞ்சாலிக்குச் சிலை எழுப்பப் படவில்லை

நாங்கள் ரோஜாப்பூக்கள்
ஆனுல் எங்களைப் பறிப்பவர்களின்
கைகளில்தான் முள்முளைத்திருக்கிறது.

நாங்கள் விளம்பரப் பலகைகள்.
விளம்பர வரி இதுதான்:

''வாத்சாயனத்திற்கு
இன்னும்
உரையாசிரியர்கள் தேவை.''

உணவுக் கொழுப்பில் பசி கொண்டவர்களுக்குப்
பசிக்கிறக்கத்தில் உணவானவர்கள் நாங்கள்.
குழந்தையின் பசியை நாங்கள் அறிந்ததில்லை.

ஏனெனில்,
நாங்கள் பசியின் குழந்தைகள்.
எங்கள் முதலிரவிலும்கூட
வேர்வைப் பன்னீர்தான் தெளிக்கப் படுகிறது.

நாங்கள் அடிமைகள்
அதனுல்தான்
எங்கள் சாம்ராஜ்யத்தில்
சூரியன் உதிப்பதுமில்லை
அஸ்தமிப்பதுமில்லை.

## நீங்கள் என்னை சோசலிஸ்ட் ஆக்கினீர்கள்

ஓ! என்றன் அடிநாளின் நண்பர்களே!
உங்களது வாய்ப்பந்தல் 'பூஜை'களின்
உறவுகளுக் (கு) அப்பால்நான் உலவுகிறேன்,
எங்கெல்லாம் எம்கொடியை அணைத்தபடி
இளங்காற்று நடக்கிறதோ அங்கெல்லாம்
என்னில்நான் என்னுடைய கவியிசைப்பேன்.

எங்கெல்லாம் வர்க்கவெறிப் புயலிடையோர்
இளம்படகு தவழ்கிறதோ அங்கெல்லாம்
என்னுடைய துடுப்புகளில் நான் துடிப்பேன்.

எங்கெல்லாம் பகல்மேகப் பந்தலின் கீழ்
இளையயுகம் எழுகிறதோ அங்கெல்லாம்
இரத்தகங்கை அலைகளில் ஓர் அலையாவேன்.

ஓ! என்றன் அடிநாளின் நண்பர்களே!
நீங்களெல்லாம் திசைமாறிச் சென்றாலும்
நீங்களென்னை சோசலிஸ்ட் ஆக்கினீர்கள்.

தபோவனமும் 'குஷை'ப் புல்லும் தேவதேவன்
தர்மநெறிப் போர்வைகளும் யுகாந்திரத்தின்
தத்துவங்கள் எனப்புலம்பும் யோகிகளே!

உங்களது சன்னதியின் வெளிப்புலத்தில்
உழைப்பாளர் வேர்வைமலர் சிந்துகின்ற
''தாய்பூமிக்கோவிலில்'' நான் பாடுகிறேன்,

ஓ! இந்தக் கலியுகத்தின் யோகிகளே!
நீங்களெல்லாம் திசைமறைக்கப் பார்த்தாலும்
நீங்களென்னை சோசலிஸ்ட் ஆக்கினீர்கள்.

உலகத்தின் குழந்தைகளே! மானுடத்தின்
உயிர்வேர்க்கு நீராகும் வேர்வைகளே!
ஓ! எங்கள் உழைப்பாளித் தோழர்களே!

இனிமேல்என் கவியெல்லாம் சமூகத்தின்
இருட்டறையைச் சுட்டெரிக்கும்! பேச்செல்லாம்
இனிமேலே மௌனத்தின் பெரும் பகைவன்.
ஓ! எங்கள் உழைப்பாளித் தோழர்களே!
நீங்களெல்லாம் போராட அழைத்தீர்கள்!
நீங்களென்னை சோசலிஸ்ட் ஆக்கினீர்கள்.

# கறுப்பு மலர்கள்*

முன்னம் ஒரு வசந்தருது
முதல்பூக்கள் உதிர்ந்து விழும்
மோகலயச் சிறுபொழுது
பின்மாலை... வானவெளி...
பிறை ஓடம்... மேகங்கள்...
உங்களுடைச் சிறுவீதி
அங்கே ஓர் யாத்ரீகன் வந்தான்...

இன்றைக்கு முன்னால் ஓர்...
இருளிரவின் வாழ்காலம்...
இருட்டுக்கு நிலாப்பூச்சு
என்னுடைய தோழியர்கள்...
இளம் நாளின் பொன் கூடு...
எங்களுடைச் சிறுவீதி
அங்கே ஓர் யாத்ரீகன் வந்தான்...

என்ன அது?
யாத்ரீகன் கைத் தலத்தில்
ஏந்திவிலே கூறுகிறான்.

---

* *நீக்ரோக்களைப் பற்றிய உருவகக் கவிதை*

இருட்டினுடை ஆத்மாவா?
எரிகரியின் சொப்பனமா?
இதழ்கறுத்த புன்னகையா?
என்ன அது?

கறுப்பு மலர்
கறுப்பு மலர்

இருட்டினுடை ஆத்மாவாய்
எரிகரியின் சொப்பனமாய்
இதழ் கறுத்த புன்னகையாய்
இருக்குமொரு
கறுப்பு மலர்.

:'கலைச் சிருஷ்டிச்
சுவனத்தில்
காலவழி வசந்தத்தில்
கண் திறந்த
கறுப்பு மலர்.

பூர்ணிமையில் சூடாதீர்—இது
பொன்காசின் அடிமைமலர்.''
யாத்ரீகன் கைத்தலத்தில்
ஏந்தி விலை கூறுகிறுன்

''உங்களது பூந்தோட்ட
உள்ளில் மணமண்ணில்
இந்தவிதை தூவுங்கள்.

இருளிரவின் துளும்புதலில்
ஏகாந்த ராத்திரியில்
பூக்கும் இக்கறுப்பு மலர்—இதைப்
பூர்ணிமையில் சூடாதீர்.

எல்லையில்லா வான்வெளியில்
இறகசைத்து விளையாடும்
எம்முடைய வெண்பறவை
இங்கே பறந்துவரும்
பூக்கொய்து ஓடிவிடும்—இதைப்
பூர்ணிமையில் சூடாதீர்.''
விலைகூறிய யாத்ரீகன் வழிநடந்தான்.

எங்களுடைத் தோட்டத்தில்
எங்கும் கறுப்புமலர்
இருள் தவத்தின் பர்ணசாலை

ஒருநாள் ஓர் பூர்ணிமையின்
ஒளியிரவில்
எங்களுடைச் சிறுவீதி
இளம் பெண்டிர்...

யாத்ரீகன் தன்னுடைய
வெண்பறவை மீதேறி
வெண்ணிலவில் கால்பதித்தான்.
எனச் சொன்னார்.

எங்கிருந்தோ குயில்பாடும்
மரணகீதம்
எங்களுடைத் தோட்டத்தில்
இருள் தவத்தின் பர்ணசாலை
இதழ்இதழாய் உதிர்கிறது.

உலகத்தின் திசையெங்கும்
உதிர்கிறது கறுப்புமலர்
மீண்டுமொரு காலகதி
மீண்டுமொரு பூர்ணிமைநாள்

''உதிர்ந்துவிட்ட கறுப்புமலர்
ஓரிடத்தும் பூக்கவில்லை
பூக்கா தாம்''
தோழியர்கள் குரலோசை

மீண்டுமொரு காலகதி
மீண்டுமொரு பூர்ணிமைநாள்
அதே தோழியர்
அதே பேச்சு.

மீண்டுமொரு காலகதி
மீண்டுமொரு பூர்ணிமைநாள்

என்னுடைய தலைமீதில்
நரை நூல்கள்
எங்களுடைச் சிறுவீதி
இளம்பெண்டிர் குரலோசை

''இருட்டினுடை ஆத்மாவாய்
எரிகரியின் சொப்பனமாய்
இதழ்கறுத்த புன்னகையாய்''...
ஏதேதோ பேசுகிறூர்.

எங்களுடை நினைவுகளில்
காலகதி உள்ளவரை
கறுப்புமலர் உதிராது.

மீண்டுமொரு காலகதி
மீண்டுமொரு பூர்ணிமைநாள்
எங்களுடைச் சிறுவீதி
இளம் பெண்டிர்
அதே பேச்சு.

என்னுடைய கல்லறையின் காதுகளில்;
காலகதி...
பூர்ணிமைநாள்...
கறுப்புமலர்...

## முதல் கவிதை

(கண்ணீர் நாள்)

அன்னைத் தமிழேஎன் ஆவி கலந்தவளே
என்னை வளர்ப்பவளே, என்னில் வளர்பவளே,
உன்னைப் புகழ உலகில் பிறப்பெடுத்தேன்.
என்னை மறந்துன்னை எண்ணும் சிறப்படைந்தேன்
சொல்லில் விளையாடச் சொல்லிக் கொடுத்தவளே.
சொல்லில் உனதுபுகழ் சொல்ல முடியலையே,
உள்ளத்தை மயங்கவைத்தே உலகத்தை மறக்க வைக்கும்
கள்ளுக்குச் சொந்தமென்றே கவிஞருனைச் சொன்னாலும்
மதுவிலக்குச் சட்டத்தை மாத்தமிழர் ஏற்றக் கால்
விதிவிலக்குப் பெற்றாயே, வெறியூட்டக் கற்றாயே.
உள்ளத்துள்ளாய், என் உயிரின் உயிரே, சொல்
வெள்ளம் பெருக்கி ஒரு விந்தைக் கவியுரைக்க
சின்ன மனம்கூட்டும் சிந்தனைகள் சித்தரிக்க
முன்னி முனைகையில்ஏன் மின்னி மறைகின்றாய்?
அன்னைமுகம் பாராமல் ஆர்முகத்தைப் பார்த்தழுவேன்?
என்ன விளையாட்டம்மா? என்னைமுகம் பாரம்மா!

---

*பாவேந்தர் பாரதிதாசனை இழந்தபோது பாடியது.

உடல்மலரின் உயிர்த்தேனை எடுத்துக் கொண்டே
ஓடுகின்ற சாவுவண்டே ஒருவிண் ணப்பம்
கடல்நீராய் நாங்கள்உப்புக் கண்ணீர் சிந்த
கவிதைப்பூக் காட்டில்தேன் மாந்த வேண்டாம்
குடியான வன்வீட்டு அம்மிக் கல்லை
குபேரவீட்டுக் கோழிமுட்டை உடைப்ப தைப்போல்
குடிகாக்கும் மலைமனத்துக் கவிஞரைப் போய்க்
குள்ளமனச் சாவே நீ அழிக்கலாமா?

தீக்கண்கள் விழிக்கட்டும்! தோள்கள் எல்லாம்
தினவூறிக் குதிக்கட்டும்! வீரச் சொல்லால்
நாக்கெல்லாம் துடிக்கட்டும்! உணர்ச்சி யூறி
நரம்பெல்லாம் புடைக்கட்டும்! உரிமை வேட்கை
பூக்கட்டும்! எனக்கொதித்துப் போர்ப்பாடல்கள்
புனைந்தவனோ பிணமானான்; சோகம் என்னைத்
தாக்குவதற்கு வருகிறதே, ஆசை என்னும்
தணல்வேறு சுடுகிறதே, என்ன செய்வேன்?

வான்மதியே, இன்னும்நீ குளிர்வதற்கோர்
வன்நெஞ்சை எங்கிருந்துபெற்றாய்? சோலைத்
தேன்மலரே, சாவுவண்டு பூமிப் பூவின்
தேனெடுத்துப் போனபின்னும் மலர்ந்த தேன்? ஏன்?
ஏன்கதிரே, இன்னும்நீ உறங்கவில்லை?
ஏ! ஏ! ஏ! இருட்கணமே எங்குற் றாய்நீ?
கோன் எங்கள் கோன் எங்கே?ஐயை யோஇக்
கோளங்கள் எல்லாமே தூளா கட்டும்!

கதலிமரம் பழுத்திருந்த எங்கள்தோட்டம்;
கதவங்கள் திறந்திருந்த தோட்டம்;வேறு
புதரெல்லாம் வாழ்கின்ற போது சாவுப்
புயல்கொள்ளச் சாய்ந்தபுதுக் கொடுமையைப்பார்
கதகதப்புக் கருத்திருக்கும் அன்னேன் பாட்டில்
கதறல்தான் இருக்கும்எங்கள் ஏழைநெஞ்சில்
இதழ்சிந்தும் கொழுஞ்சிரிப்பைத் துறந்து நாங்கள்
இருவிழியின் கண்ணீரில் மிதந்து வந்தோம்.

பொங்குகின்ற கடலலையே, உம்போல் எம்மைப்
பொங்கவைத்த கள்வன்யார்? வானவீட்டில்
தங்குகின்ற தேய்ப்பிறையே, உன்போல் எங்கள்
தங்கத்தைத் தேய்த்தவன்யார்? அழப்பி றந்த
மங்கையரே, மங்கையரே! அவலம் தன்னை
மண்ணகத்தில் படைத்தவன்யார்? விழிகள்கொட்டும்
செங்குருதிக் கண்ணீரே, நீசொல் இந்தச்
செகமுழுதும் படைத்தவன்யார்? படைத்தவன்யார்?

பூக்களே,ஓர் மொட்டாகப் போய்வி டுங்கள்!
பூகம்பங்களே! நீங்கள் புறப்படுங்கள்!
தீக்கொழுந்துகளே, எங்கும் நிறைத்திடுங்கள்!
தீஞ்சுனைகளே, நீங்கள் மறைந்திடுங்கள்!
மாக்கடலே, நீயிந்த மண்ணுக் குள்ளே
மாமதியே, நீயிந்த விண்ணுக் குள்ளே
போக்கிடம் தேடிக்கொண்டே போய்விடுங்கள்
புலம்பிக்கொண்டே எம்மைக் கலங்க விட்டே!

